ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 45.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகை

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

ஸம் 4 | செப்டம்பர்மீ 1952 நந்தனஸூ புரட்டாசிமீ | 9 இதழ்

## ஈடு மூன்றாம்பத்து

பகவத்விஷயம் ஈடு முப்பத்தாறாயிரப்படியில் மூன்றாம்பத்து ஒன்று தவிர மற்ற பத்துக்களெல்லாம் ஏற்கெனவே வெளிவந்திருக்கின்றன. மூன்றாம்பத்து ஒன்றுமாத்திரம் அச்சுக்கூடத்தின் அஸௌகரியத்தினால் சில மாதங்களாய் வெளிவரத்தவறியிருந்தது. அஃது இன்று வெளிவந்து விட்டது. இனி ஒன்று முதல் ஐந்துவரையிலுள்ள பத்துக்களை ஒரு ஸம்புடமாக பயிண்டு செய்வித்துக்கொள்ள விருப்பமுடையவர்கள் அப்படியே செய்வித்துக் கொள்ளலாம்.

பகவத் விஷயம் முழுவதும் இரண்டு ஸம்புடமாக பயிண்டு செய்வித்த ஸ்ரீகோசம் க்ரந்தமாலை ஆபீஸில் 25 ரூபாய் விலைக்குக் கிடைக்கும். இதுபோல் தெலுங்கு லிபியிலும் பூர்த்தியாகக் கிடைக்கும்.

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

நாம் பல தடவை தெரிவித்தும் பலர் இதுவரையில் சந்தாப்பணம் செலுத்தவே யில்லை. ஒருவரிருவர் சக்தியில்லாமையைத் தெரிவித்து ஸஞ்சிகைகளைத் திருப்பியனுப்பினர்கள். அப்படியே திருப்பியனுப்பினாலும் ஏற்றுக்கொள்ளத் தடையில்லை. ஒரு விஷயம் முடிந்துவிடுகிறதன்றோ. ஒரு பத்திரிகையோ புஸ்தகமோ அச்சிடுவதில் எவ்வளவு கஷ்டமுள்ளதென்பதை அறியாதாரில்லை. அறிந்தும் சந்தாசெலுத்த மனமில்லாமலிருப்பவர்கள் பத்ரிகையில் ஆசையை விட்டிடுவது நலம்.

சந்தாவகுப்பை இரண்டாகப்பிரித்து 2—8—0 செலுத்துவது ஒரு வகுப்பென்றும், 10—0—0 செலுத்துவது மற்றொரு வகுப்பென்றும் இப்போது வைக்கப்பட்டிருக்கிறது. இந்த ரீதியில் அனேக விதமான சிரமங்கள் ஏற்படுவதனால் அடுத்த ஜனவரிமீ முதல் இவ்விதமான வகுப்புவேற்றுமையை நீக்கி 5—0—0 ரூபா சந்தாவகுப்பு ஒன்றே ஏற்படுத்தப்படும். பத்திரிகைகளையோ புத்தகங்களையோ எல்லாரும் ஸமரீதியாகப் பெறலாம். பவிஷ்யத்காலரீதியான இது நிற்க. வர்த்தமாந கால வ்யவஸ்தையை அவரவர்கள் பரிபாலித்தேயாகவேண்டும். ஆகவே சந்தா பாக்கியை யாவரும் உடனே செலுத்தக்கடவர்கள்.

இங்ஙனம்:

காரியதர்சி—ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபா.

மணியார்டர் அனுப்ப விலாஸம்—க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

ஸ்ரீ:

# ந்ருஸிம்ஹப்ரியா-ஸமீக்ஷா

நிகழும் புரட்டாசி மாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில் முதலினும் முடிவிலுமுள்ள வியாஸங்கள் விமர்சிக்கப்படுகின்றன. ஸாமரஸ்யாவகாஹநம் என்பது முதல் வியாஸம். ஆசார்ய ஸ்ரீஸூக்திகளுக்குப் பரஸ்பரவிரோத சங்கையைத் தவிர்த்து ஸாமரஸ்யமேயுள்ளதென்று உபபாதனம் செய்யும் ஸரணியை உகப்பதே நன்றாம். யோஜநாபேதம் அபலபிக்கவொண்ணுதபடி ப்ரத்யக்ஷமாய் விளங்குமிடங்களில் அதையும் இல்லைசெய்யப்புகுவது ப்ராமாணிகர்களின் பத்ததியாகாது. ஒரு ஆசார்யரே ஸ்வக்ரந்தத்தில் அதவா என்றும் யத்வா என்றும் அடியிட்டுச் சில அர்த்த விசேஷங்களை யருளிச் செய்திருந்தால் இவை தனிப்பட்ட அர்த்தங்களல்லவென்றும் ஒரே அர்த்தந்தானென்றும் நிர்வஹிக்கப்பார்ப்பது அந்த க்ரந்தகாரர்க்கு அஸாமர்த்தியத்தையே நிரூபிப்பதாகும். எதிலும் ஸாமரஸ்யம் காட்ட வழியுண்டு. வழி தவறிக்காட்டும் ஸாமரஸ்யமானது வக்தாவுக்கு அப்ராமாணிகத்வத்தை நிலை நிறுத்துமேயல்லது வேறொன்றும் செய்யாது.

ப்ரக்ருத விஷயம் என்னவென்றால்; திருவாய்மொழியில் * ஓடும்புள்ளேறியென்ற பதிகத்திற்கு ப்ரதிபாத்யகுணமாக ஆறாயிரப்படியில் பிள்ளான்நிரூபித்தருளின குணம் வேறு; நம்பிள்ளை திருவடிகள் நிரூபித்தருளின குணம்வேறு; த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியும் ஸாரமும் பணித்த தேசிகன் ஆறாயிரப்படியில் திருக்கண் செலுத்தாமல் நம்பிள்ளை திருவடிகள் நிரூபித்தருளின குணத்தையே தாம் ஆதரித்து ச்லோகமருளினர்; இதனால் தேசிகனும் நம்பிள்ளை திருவடிகளும் ஸாமரஸ்யமுடையவர்களென்று ஸ்பஷ்டமாகிறது. இவர்கள் பரஸ்பரம் விரஸப்பட்டுக்கொண்டிருந்தார்களென்றும் ஸாமரஸ்ய நிலையில் இவர்கள் இருந்தார்களில்லை யென்றும் பிறரெழுதினதை மறுக்கவே நாம் இத்தகைய விஷயங்களை யெடுத்துக்காட்டினது. மெய்யே ஸாமரஸ்யம் நிர்வஹிக்கக் குதூஹல முடையார் இங்குச் செய்ய வேண்டியதென்ன? 'தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை போல்வாருடைய திவ்யஸூக்திகளோடு ஸாமரஸ்யம் பொலியவே அருளிச் செய்பவர்' என்பதை மற்றும் பல நிதர்சனங்களைக்காட்டி ஸமர்த்திக்கவேண்டுவதேயாகும். அதைவிட்டு வேறுவழியில் புகுவது ஒருகாலும் பொருந்தாது.

* ஓடும் புள்ளேறியின் ஆறாயிரப்படி ப்ரவேசம்—"இப்படி தம்மோடு கலந்தருளின எம்பெருமானுடைய திவ்யைச்வர்யம் சொல்லுகிறது" என்னுமிவ்வளவே. உடனே முதற்பாட்டின் வியாக்கியானம்—"அதில் முதற்பாட்டில் திருநாட்டிலைச்வர்யம் சொல்லுகிறது" என்னுமிவ்வளவே.

இனி ஈடுமுப்பத்தாறாயிரப்படியை நோக்குவோம்; "கீழில் திருவாய்மொழியிலே நிரதிசயபோக்யனென்றார்; இதில் அவனுடைய ஆர்ஜவகுணம் சொல்லுகிறார்" என்று உபக்ரமம். அதன் பிறகு—"இத்திருவாய்மொழிதான் ஸர்வேச்வரனுடைய ஐச்வர்யத்தைச் சொல்லுகிறது என்பாருமுண்டு; அன்றிக்கே ஈச்வரத்வலக்ஷணம் சொல்லுகிறது என்பாருமுண்டு. அன்றிக்கே, கீழே * பாடியிளைப்பிலமென்றார்; அப்படியே பாடியநுபவிக்கிறார் என்பாருமுண்டு; ஆர்ஜவகுணம் சொல்லுகிறதென்று பட்டர் அருளிச்செய்யும்படி." என்கிற ஸ்ரீஸூக்திகள் உள்ளன.

இதனால் பிள்ளானுடைய நிர்வாஹம் வேறு; பட்டருடைய நிர்வாஹம் வேறு—என்பது நிஸ்ஸந்தேஹமாகப் புலனாகும். பட்டர் இத்திருவாய்மொழிக்கு ப்ரமேயமாகவருளிச் செய்த ஆர்ஜவகுணமும் பிள்ளான் பணித்த திவ்யைச்வர்ய குணமும் வேறுபட்டதன்றிக்கே ஒன்றேயாகில் ஈட்டு ஸ்ரீ ஸூக்திகள் எப்படியிருக்கவேணுமென்பதை இனி நாம் சொல்ல வேண்டா. அன்றிக்கே, அன்றிக்கே என்று பக்ஷாந்தரங்களை ப்ரஸங்கித்து வருமடைவிலே பிள்ளானுடைய நிர்வாஹம் தனிப்படவும் பட்டருடைய நிர்வாஹம் தனிப்படவும் ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டிருக்க, இவ்விரண்டு நிர்வாஹங்களும் வேறுபட்டவையல்லவென்றும் ஒன்றுதானென்றும் ஸமர்த்திக்கப் பார்ப்பது தேவலோகத்திலிருந்து நேராக ப்ருஹஸ்பதி தானே வந்தாலும் ஸாத்யமன்று.

ஸாமரஸ்யாவகாஹநமென்னும் வியாஸத்தில் * ஒடும்புள்ளேறியென்று மகுடமிட்டு " இத்திருவாய்மொழியில் ஆர்ஜவகுணம் முக்யமாக ப்ரதிபாத்யமென்பது திருவாறுயிரத்தில் ' இப்படித் தம்மோடு கலந்தருளின வெம்பெருமானுடைய ஸர்வைச்வர்யம் சொல்லுகிறது' என்ற முதல் வாக்யத்திலேயே ஸ்பஷ்டம் " என்றெழுதியுள்ளது. இதற்கு யதாச்ருத க்ராஹிகளுங்கூட மயங்கார்கள். 'திவ்யைச்வர்யம் சொல்லுகிறது' என்றிருக்கிற ஸூக்தியை ஸர்வைச்வர்யம் சொல்லுகிறதென்றிருப்பதாக உதாஹரித்தது மருளென்று எப்படி நிர்விவாதமோ அப்படியே 'ஸ்பஷ்டம்' என்று இவர்கள் கூறும் பொருளும் மருளேயென்பது நிர்விவாதம். சப்தத்தோடு அர்த்தத்தோடு வாசியற இரண்டிலும் மருள் மலிந்து கிடக்கிறதென்பதே ஸ்பஷ்டமாகிறது.

திருவாறுயிரத்தில் இப்பதிகத்தினுள் ஆர்ஜவமென்னும் பதம் ஒரு மூலையிலும் கிடையாது. திவ்யைச்வர்யமும் ஆர்ஜவமும் பர்யாயமுமன்று. அது ஸாமாந்யபதம், இது விசேஷபதம்' என்று கொள்வதற்கும் அவகாசமில்லை. இப்பதிகத்தின் நிகமனப் பாசுரத்தில் எம்பெருமானுடைய ஆச்ரித வாத்ஸல்யமாகிற மஹாகுணத்தை ப்ரஸ்தாவிக்கிறார் பிள்ளான். வாத்ஸல்யமும் ஆர்ஜவ பர்யாயமன்று. எல்லாம் இவர்களுடைய மருளுக்கும் ஆக்ரஹத்திற்குமே பர்யாயமத்தனை. எவ்விதமான ஆக்ரஹமென்னில்; நம் தேசிகன் பிள்ளானிட்டருளினபடியிற் செல்லாமல் நம்பிள்ளை திருவடிகளிட்டருளினபடியிற் சென்று இத்திருவாய்மொழிக்கு ஆர்ஜவகுணம் ப்ரதிபாத்யமென்று ஒரு தடவையன்றிக்கே மூன்று தடவை அருளிச்செய்துவிட்டாரே! இது நமக்கெல்லாம் அவமானமாயிருக்கிறதே; இந்த அவமானத்தை ஒருவாறு அகற்றிக்கொள்ளவேணுமே; பிள்ளானுடைய திருவுள்ளத்திலும் ஆர்ஜவ குணந்தான் உத்திஷ்டமாயிருந்ததென்று சொல்லிவிடுவோமாகில் இவ்வவமானம் ஒருவாறு தொலைந்தொழியுமன்றோ! என்று நினைத்து ஏலாத பொருளை ஏறிடப்பார்க்கிற ஆக்ரஹந்தான் ஊர்ஜிதமாகத் தேறும்.

இங்கு ப்ராமாணிகர்கள் செல்லவேண்டியவழியை மீண்டும் உணர்த்துகிறோம். "ஒடும்புள்ளேறிக்கு திவ்யைச்வர்யத்தையே ப்ரதி பாத்யமாகக் கொண்டார் பிள்ளான். நம்பிள்ளை திருவடிகள் பட்டர்வழியாக வந்த ஆர்ஜவகுணத்தையே இத்திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யமாக ஆதரித்தார்கள். தேசிகன் குணக்ராஹியாய் ஸகலாசார்யர்களுடையவும் ஸ்ரீஸூக்திகளை ஸமீதியாகவே ஆதரிப்பவராதலால் இந்த ஸ்வகீய மஹாகுணத்திற்குச்சேர பட்டர் வழியாக வந்ததை ஆதரித்தார். இதனால் தேசிகனுடைய ஸாமரஸ்யம் ஆச்சரியமாக விளங்குகின்றது" என்று இவ்வண்ணமாகவே யெழுதியிருக்கவேண்டும். வேறுவிதமாக எழுதுவதெல்லாம் 'அந்தோ! இவர்களிடம் சிறிதும் ஆர்ஜவமில்லையே!' என்னும் நிர்வேதத்தையே நிலைநாட்டும்.

இந்த ப்ரஸங்கத்தில் யாத்ருச்சிகமாக இவர்களுக்கு ஒரு நிதி கிடைக்கிறது; அதை இவர்கள் பெற்று மகிழ்வது நலம். பல வருஷங்களுக்குமுன்பு (அதாவது) மஹர்ஷி வாஸு தேவாசார்யஸ்வாமி வேதாந்ததீபிகைக்கு ஆசிரியராயிருந்தகாலத்தில் அதிகரணஸாராவளிக்கு ஒரு மணிப்ரவாள வியாக்கியான மெழுதித்தரவேணுமென்றும், அதைத் தாம் வேதாந்த தீபிகையில் வெளியிட்டு ஆனந்திக்கப்பெறவேணுமென்றும் அடியேனுக்குத்தெரிவித்திருந்தார். அப்படியே அடியேன் எழுதியனுப்பிக்கொண்டிருந்தேன். அது வேதாந்த தீபிகையின் சில ஸஞ்சிகைகளில் அச்சாகிவந்தது. [பிறகு சிலருடைய மாச்சரியத்தினால் அந்த ப்ரகாசநம் நிறுத்தப்பட்டு நின்றது—என்பது நிற்க.] நாம் அந்த வியாக்கியான மெழுதுகையில் * வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யுபரசிததயா * (15.) என்கிறச்லோகத்தின் நாலாவது பாதம் * [illegible] *என்றிருப்பதில் அநுபபத்தி சங்கை தோன்றிற்று. இஹ என்பது மூன்றாவது பாதத்திலேயே யிருக்கிறது; அது மறுபடியும் நான்காவது பாதத்தில் இருக்கச் சிறிதும் அவசியமில்லை. அநாவச்யகத்வம் மாத்திரமேயன்று; அந்வயிக்கவும் மாட்டாது. '[illegible]' என்று பாடமிருந்தால் நன்கு பொருந்துகிறது. இப்படித்தான் பாடமிருந்திருக்கும்; அச்சுப்பிழையாக இஹ என்று விழுந்திருக்கும்; ஆனாலும் ஸஹஸா நாம் திருத்திவிடத்தகாது; பெரியார்களைக்கேட்போம்—என்றெண்ணிப் பல பெரியார்களிடம் விஜ்ஞாபித்துக் கொண்டேன். [illegible] என்பதை யடித்து ([illegible]) யென்றே திருப்புட்குழிஸ்வாமி திருக்கையால் திருத்தியிருந்த அச்சுப்புத்தகத்தையும் திருத்தமாகவே எழுதப்பட்டிருந்த ஓலை ஸ்ரீகோசங்களிரண்டையும் ஸேவிக்கநேர்ந்தது. அப்போது அடியேன்கொண்ட ஆனந்தத்திற்கு அளவில்லை. அதே ஸமயத்தில், திருக்குடந்தையில் ராயம்பேட்டை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அதிகரணஸாராவளியை (ஸுந்தராசார்ய?) வியாக்கியானத்தோடு சுத்தப் பதிப்பாக அச்சிடுவதாய் ப்ரசுரஞ்செய்து சில பாரங்களையச்சிட்டு மாதிரிக்காபியாக ப்ரகாசனம் செய்திருந்தார். அதில் இந்த *வ்ருத்திக்ரந்தேது ச்லோகமும் அடங்கியிருந்தது. அதிலும் (இஹ கடதே) என்கிற அபத்தபாடமேயிருந்தது. அப்போது அந்த R. V. K. ஸ்வாமி எம்மோடு ஸௌஹார்த்தத்தை விட்டு மாறுபட்டிருந்த ஸமயமாதலால் அவருடைய தவறுகளை எடுத்துக்காட்டிப் பல ப்ரசுரங்களை நாம் செய்த அடைவிலே (இஹ கடதே) என்னுமிந்தத் தவறையும் எடுத்துக்காட்டி இது தவறுதானென்பதை விரிவாக நிரூபித்தும் எழுதிப் பத்திரிகையில் வெளியிட்டோம். அதைக் கடாக்ஷித்த அந்த மஹாமஹோபாத்யாயர் உண்மையில் மஹா விவேகியாகையால் உள்ளம்பூரித்து 'இப்படிப்பட்ட மஹோபகாரம் வேறு யாரால் செய்யமுடியும்? தேசிகனைத் தாங்குகிற வித்வான்கள் நாங்களேயென்று வீணுகக் கொக்கரிக்கின்ற வித்வான்களில் ஒருவர்கூட இந்த ஸூக்ஷ்மமான தவறை எடுத்துக்காட்டசக்தரல்லர்'......இத்யாதியாக விரிவாயெழுதி நீண்ட ஸ்ரீமுகமநுக்ரஹித்து, இடையில் ஏறிட்டுக்கொண்டிருந்த மாத்ஸர்யத்தை அறவேவிட்டுப் பழைய ஸௌஹார்த்தத்தை முன்னிலும் அதிசயிதமாக்கிக்கொண்டார். இது ஜகத்விக்க்யாதமான விஷயம். அதன் பிறகு நாம் ஸ்ரீதேசிகக்ரந்தமாலையச்சிட்டபோதும் (இதி கடதே) என்கிற ஸாதுபாடத்தையே வெளியிட்டோம். அந்தஸமயத்தில் ஸ்ரீமதஹோபில மடத்தின் மூலமாக அதிகரண ஸாராவளி இரண்டு வியாக்யானங்களோடு கூட வெகு அழகாகப் பதிப்பிக்கப்பட்டு வந்தது. தந்முத்ரண நிர்வாஹகர்களுக்கும் அந்த R. V. கிருஷ்ணமாசார்யஸ்வாமியே இந்த ஸாது பாடத்தைத் தெரிவித்து அதிலும் இப்பாடமே வெளிவரும்படி செய்திருக்கிறார் 1939 வருஷத்தில்.

இவ்வளவு நடந்திருந்தும் இப்போது ந்ருஸிம்ஹப்ரியையானது ஸாமரஸ்யாவகாஹந வியாஸத்தின் தொடக்கத்திலேயே '[illegible]' என்று பழைய அபத்தபாடத்தையே

ப்ரசுரம் செய்திருக்கிறது. ஜாகரூகர்களாயிருந்து நிர்வஹிக்கக்கூடிய திறமைபெற்ற மஹா பண்டிதர்களைக்கொண்டு ந்ருஸிம்ஹப்ரியையை அநவத்யமந்தமாக வெளியிடுவித்து வரவேணு மென்று நாம் அடிக்கடி செய்து வருகிற ஸமுத்போதனம் நிஷ்ப்பலமாகிறதே யென்கிற நிர்வேதத்தை நாம் வெளியிடாமலிருக்க முடியுமா? இவர்களுடைய ஆர்ஜவம் இவ்வொரு விஷயத்திலாவது வெளிவருமா? 'இவன் சொல்லி நாம் திருத்திக்கொள்வதா?' என்கிற ஆக்ரஹமே கொண்டு இனி இவர்கள் இதிலும் வாதாடப்போகிறார்கள். மடத்துப் பதிப்பிலும் (இதி கடதே) என்கிற பாடமே தைவாதீனமாய் ஏறியிருப்பதால் அப்பாடத்தைப் பழிக்கத் துணியார்கள். (இஹ கடதே) என்கிற பாடமும் நன்றுதானென்று வாதிக்க எழுவார்கள். எல்லாக் கூத்தையும் உலகம் பார்க்கவே போகிறது. 'இஹ கடதே' என்கிற பாடம் ஒரு படியாலும் பொருந்தாது. கீழே * நிர்வாஹஸ் தூபசாராத் க்வசித் * என்று தனிவாக்யமாக முடிந்திட்டது. அதன் மேல் (இதி) என்றது ஆகவே என்றபடி. இதுதான் இங்கு அவசியமிருக்கவேண்டிய பதம். இஹ என்றால் அசடுதட்டியே தீரும். வியாக்கியானங்களும் இங்குக் கைவிளக்கேற்றிக் காட்டுகின்றன.

இப்படியாக, சிறியனவும் பெரியனவுமாக ஸ்ரீதேசிகஸூக்தி மருமங்கள் பலவற்றை நம்மிடமறிய நிற்கின்ற இவர்கள் மீண்டு மீண்டும் நம்மோடு எதிரம்பு கோக்கவருவதும் க்ஷாமணபத்ரிகை யெழுதிக்கொண்டு ஓய்வதுமாக இவையும் ப்ரவாஹதோ நித்யமாம்படி பகவத் ஸங்கல்பம் காணநின்றோம். இந்தப் பாடஸ்காலித்ய விஷயம் ஒரு சிறு அக்ஷரத்தைப் பற்றியதேயானாலும் இதன் அருமையை யுணர்ந்த R. V. K. ஸ்வாமி மஹாநிதிபெற்றதாகவே நினைத்து மகிழ்ந்தார். அவர் பரமதிக்கும்வரையில் இதையே வாய்வெருவியிருந்தாராம்.

ப்ரக்ருத விஷயத்தை முடிக்கிறேன். * ஒடும்புள்ளேறியில் பிள்ளானுடைய படி தப்பு என்றாவது அஸமஞ்ஜஸம் என்றாவது யாரும் சொல்லவில்லை, நினைக்கவுமில்லை. அவர் ஒரு வழியிற் சென்றார். சில சப்தஸ்வாரஸ்யங்களை நோக்கி பட்டர் வேறு வழியிற் சென்றார். அதை மற்ற வ்யாக்யாதாக்கள் எடுத்துக் காட்டியிருந்தார்கள். அது தேசிகனுடைய திருவுள்ளத்தைக் கவர்ந்தது. கவரவே, அதையே ஆதரித்துத் தமது க்ரந்தத்தில் ஏற்றுக் கொண்டார். இப்படி ஒரு விஷயமன்றே. ஸ்தோத்ர பாஷ்யம் முழுவதும் பெரியவாச்சான் பிள்ளை திவ்யஸூக்தி மொழிபெயர்ப்பு மயமன்றோ. திருவாய்மொழியிலும் பலபல விடங்களன்றோ காட்டப்பட்டன. * தாளதாமரைப் பதிகத்திற்கு மார்க்க ஸஹாயத்வமென்கிற குணம் ப்ரதிபாத்யமாக நம்பிள்ளை திருவடிகளால் மாத்திரமே அறுதியிடப்பட்டது. பிள்ளான்படியில் அந்த ப்ரஸ்தாவமே கிடையாது. தேசிகன் நம்பிள்ளை திருவடிகளின் வழியைத்தான் தஞ்சமாகப்பற்றி ச்லோகங்களியற்றியுள்ளார். ஸாமரஸ்ய த்ருஷ்டியுள்ளவர்கள் இப்புடைகளுக்கு உகக்கவேணுமேயொழிய வயிற்றெரிச்சல் கொள்ளலாமோ? கொண்டால், எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் இதற்குப் பரிஹாரம் துர்லபமென்பதுதான் சிலாலிகிதமாகும். ... ... ... *

இனி, சரமவ்யாஸ விமர்சம். இந்த ந்ருஸிம்ஹப்ரியாவின் முடிவிலும் வழக்கப்படி ப்ரகீர்ணகம் வெளி வந்துள்ளது. *பூமிஷ்டாம் தே நமஉக்திம் விதேம * என்னு முபநிஷத் வாக்யத்திற்கு நம்பிள்ளை பணித்த இன்சுவைப்பொருளை நிந்தித்து ந்ருஸிம்ஹ ப்ரியாவில் அடுத்தடுத்து வெளிவந்துகொண்டிருப்பதால் அதைத் தடுக்கவேணுமென்றும், இதுவரை வெளியிட்டதற்கு அநுதாபம் காட்டவேணுமென்றும் நாம் ஸ்ரீமத்ஸ்வாமிகளின் திவ்ய ஸன்னிதானத்திற்கு அறிக்கையொன்று அச்சிட்டனுப்பி அதை உலகமெங்கும் பரவவிட்டிருந்

தோம். அதைக்கண்டவர்கள் யாவரும் இது மிகவும் யுக்தமான அறிக்கையென்று கொண்டாடி வருகிறார்கள். அறிக்கை பெற்றவர்கள் மாத்திரம், நம்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளை தூஷித்துவருகின்ற நபரையிட்டே மேன்மேலும் கைங்கரியம் செய்வித்து வருகிறார்கள். பாமரவஞ்சனையாக எத்தனை நாள் எவ்வளவு எழுதினாலும் ஒருநாள் பிடியுண்டேயாகவேணுமென்பது நிர்விவாதம், நிஸ்ஸந்தேஹம்.

1. "இங்கு பிறர் சொல்லும்பொருள் வ்யாக்யான விருத்தமாகையால்
அப்ராமாணிகமென்பது ஸுப்ரதிஷ்டிதம்."

என்று முன்பு தூஷகர் எழுதியிருந்தார். நம்பிள்ளையருளிச்செய்ததென்று நாடு நகரமும் நன்கறிந்த பொருளை 'பிறர் சொல்லும் பொருள்' என்று அநுபாஷித்ததும், அதனை வாக்ய ந்யாயவிருத்தமென்றதும் அப்ராமாணிக மென்றதும் தவறு—என்று நாமெழுதியிருந்தோம். இதற்கு என்னபதில் வந்திருக்கிறதென்றால், பிறர் என்றது நம்பிள்ளையை யன்று, வேறு வாதிகளையே குறித்தது என்கிறார்கள். *பூமிஷ்டாம் தே* இத்யாதிச்ருதிக்கு இரண்டு வகையான பொருள்களே வெளிவந்திருக்கின்றன. ஒன்று நம்பிள்ளையருளிச்செய்தபொருள்; மற்றொன்று தேசிகனருளிச்செய்த பொருள். இவ்விரண்டு பொருள்கள் தவிர மூன்றாவதான பொருள் யாரும் சொல்லவில்லை. சொல்வதற்குமில்லை. 'பிறர் சொல்லும் பொருள் அப்ராமாணிக'மென்று இவர்கள் தூஷித்தது நம்பிள்ளையருளிய பொருளையன்றாகில் தேசிகனருளிச் செய்த பொருளையே தூஷித்தோமென்றதாகவேண்டும். அதுவுமன்றென்னில்; பின்னை எது? என்பதை ஸ்ரீ ஜீயர்ஸ்வாமிகளின் முன்னிலையிலேவே விஜ்ஞாபிக்கட்டும். இப்படியாகப் பாமரவஞ்சனம் செய்துகொண்டு காலம் கழிக்குமிவர்கள் சாஸ்த்ரார்த்த ஸேவகர்களாம். இந்த வஞ்சனைக்கன்றோ ந்ருஸிம்ஹப்ரியாவும் உடன்பட்டிருக்கிறது.

"ஈட்டிலுள்ள விலக்ஷணந்வயம் ஸம்ப்ரதாயாகதமன்று, புதிதாகத்தோன்றியதே" என்று, விவரணநிரபேக்ஷமாகவும் தூஷிக்கப்பட்டிருக்கிறது. 'பட்டர் முதலிய ஆசார்யர்களின் உபதேச பரம்பரயாவந்ததன்று' என்றன்றோ அதற்கு அர்த்தம்—என்று எழுதுகிறார்கள். 'இதுவன்று அர்த்தம், வேறு அர்த்தமுள்ளது' என்று யாரும் சொல்லவில்லை, நினைக்கவில்லை. ஸதாசார்யர்திருவடிகளிலே நெடுநாள் வாழ்ந்து கேட்டவர்கள் அருளிச்செய்யும் அர்த்தங்கள் ஸம்ப்ரதாய ஸித்தமன்றிக்கே வேறு எப்படியிருக்கமுடியும்? ஸ்ரீ பாஷ்யகீதா பாஷ்யாதிகளில் பல நூற்றுக்கணக்கான அர்த்தங்கள் இருக்கின்றன; அவை ஸம்ப்ரதாயாகதமல்ல, தாந்தோன்றிகள்—என்று பிறர்தூஷித்தால் இவர்கள் தலையாட்டவேண்டியது தவிர வேறுண்டோ? ஆளவந்தாரருளிய அர்த்தங்களையும் இங்ஙனே தூஷிக்கலாமிறே. பட்டரையும் சேர்த்து தூஷிக்கின்ற இவர்களுக்கு இதுவும் ஒரு வார்த்தையே.

* தே பூமிஷ்டாமென்று கூட்டி நம்பிள்ளையருளிச் செய்தபொருள் அர்த்த விரோதமில்லாமையாலும் பகவத்குண விசேஷாநுஸந்தானத்திற்கு அநுகுணமாகையாலும் நம்பிள்ளை திருவடிகள் இப்பொருளை நிபந்தித்தார்கள்—என்று இவர்கள் ஆவணிமாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில் எழுதியிருப்பதை இப்போது எடுத்துக்காட்டி தங்களுக்கு நம்பிள்ளையருளிச்செய்த பொருளில் கௌரவ ப்ரதிபத்தியேயிருப்பதாக வெழுதுகிறார்கள். இவற்றால். இவர்கள் ஒரு நிலையிலே நில்லாமல் வ்யாஹதபாஷணம் பண்ணுகிறவர்களென்பதொன்றே ஊர்ஜிதமாகிறது. நம்பிள்ளையருளிய பொருளில் அர்த்தவிரோத மில்லையென்றும் பகவத்குணவிசேஷாநுஸந்தானத்திற்கு அது அநுகுணமானதென்றும் இசைந்தபின்பு விவாதத்திற்கு விஷயம் என்ன இருக்கிறது? பகவத்குண விசேஷப்ரகாசனமொன்றே தலையானது,

அதற்குச்சேரவே நம்பிள்ளை அப்பொருளை அருளிச்செய்தார். இது ஆதியிலிருந்தே முறையிடப்படுகிற விஷயம். இப்பொருளினால் பகவத்குணாதிசயத்திற்கு ஹானி விளைகிறதென்று வாதிக்க முடியுமானால் வாதிக்கவேணும். அதற்கு இடமில்லையென்றும் ப்ரதீயமான பகவத்குணாதிசயத்திற்கே இப்பொருள் உத்தேஜகமென்றும் நமது நிரூபணவிசேஷங்களினால் தெளியப்பெற்ற விவர்கள் வாய்திறக்க வழி ஏது? நிரர்த்தக சுஷ்க வாக்ஜாலங்கள் எத்தனை காலம் செல்லுகின்றனவோ பார்ப்போம்.

* தே பூயிஷ்டாம் என்று அந்வயித்து ரஸகனமாகச் சொல்லும் பொருள் நம்பிள்ளையீட்டில் எங்கும் கிடையாதென்றும் ஆச்சான் பிள்ளையே அப்படி பொருள் செய்திருப்பரென்றும் எழுதினவர்களுக்கு நாம் நிதிகளையெல்லாம் எடுத்துக்காட்டவே இப்போது எழுதுகிறார்கள்—"பூயிஷ்டாமென்றதை மாத்திரம் ஈட்டுக்காரர் உதாஹரித்து அபிப்ரேதமான பொருளைக்காட்டியருளினர்; உண்ணுஞ்சோற்றுப் பாசுரத்தில் தே பூயிஷ்டாமென்று உதாஹரித்துக் கருத்தை ஸ்புடதரமாக்கினர்" என்று. இப்படியெல்லாமெழுத இவர்கள் வெள்காமலிருப்பதுதான் ஆச்சரியம். பெரியவாச்சான்பிள்ளைக்கும் வாதிகேஸரிஜீயர்க்கும் இப்பொருள் அபிமதமன்று என்கிற வாதமொன்று கிளம்பியிருக்கிறது. இதுவும் அந்யதாஜ்ஞாந பரமகாஷ்டை. * அது சுமந்தார்கட்கே யென்றவிடத்தில் பெரியவாச்சான்பிள்ளை

"இதுதான் குவாலாயிருக்கும் பகவதபிப்ராயத்தாலே"

என்றெழுதி உடனே *பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்றதை உதாஹரித்தருளியுள்ளார். குவால் என்கிற சொல்லுக்குப் பொருள் தெரிந்தாலன்றோ இது அவகாஹிக்குமிவர்களுக்கு. வாதிகேஸரி ஜீயரும் இந்த ச்ருதியைக்காட்டியுள்ளார். அவர் பதவுரைகாரரேயாதலால் எடுத்தாளும் ப்ரமாணங்களின் பொருளை விவரிப்பது அவரிடமில்லை. இந்த இன்சுவைப் பொருளை அவர் க்ரஹியாதவராகவேயிருக்கட்டுமே. அதனாலென்ன குறை? *பூயிஷ்டாம் நமஉக்திம் தே விதேம* என்று அந்வயித்துக் கூறும்பொருள் அஸங்கதமென்றாவது அப்படி அந்வயம் பொருந்ாதென்றாவது ஒருநாளும் ஒருவரும் சொன்னதில்லை. அந்த அந்வயத்தைக் கண்டிக்க வேண்டிய ப்ரஸக்தியே கிடையாது. பகவத்கீதையில் (10-10) * தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதி பூர்வகம், ததாமி புத்தியோகம் தம்* என்றவிடத்தில் 'ப்ரீதிபூர்வகம் பஜதாம்' என்று இதரர்கள் அந்வயித்தார்கள்; நம் ஸ்வாமி அவ்வந்வயத்தில் ரஸமில்லாமைகண்டு ப்ரீதிபூர்வகமென்பதை உத்தரார்த்தத்திலே கொண்டு கூட்டி "ப்ரீதி பூர்வகம் ததாமி" என்று அந்வயித்திருக்கிறார். தேசிகன் தாத்பர்ய சந்த்ரிகையில் "ஸ்ரீ திவஸெவுகஸி தஸ்ஸஹஜ நாநயெ ஷயொஜநம் ஊஜ; உஷாஸீதஸெ நநா நயெத...........வஙெொஉாஙஸாதி ஹஙவஜ்ஷணஙண ஷகாஙெநந ஊஹக்ஷயொஜநஜ" என்றருளிச்செய்தார். இதனால் 'ப்ரீதிபூர்வகம் பஜதாம்' என்கிற அந்வயம் அஸங்கதமென்று தேறாது. அவ்விதமாகவே 'பூயிஷ்டாம் நமஉக்திம் தே விதேம' என்கிற அந்வயமும் அஸங்கதமென்னப்போகாது. ப்ரீதிபூர்வகம் ததாமி' என்ற அந்வயத்தில் பகவத்குண விசேஷ ப்ரகாசந ப்ரயுக்தமான சிறப்பு இருப்பது போலவே * தே பூயிஷ்டா மென்கிற அந்வயத்திலும் சிறப்பு மிக்கிருக்கிறதென்பதை இவர்களே அவசாத் இசைந்து தீர்ந்தபடியாலே வாய் மூடி நிற்பதே கௌரவமாகும்.

## நன்று செய்தாரென்பர்போலும்.

9. போலும் என்று மகுடமிட்டு பத்தெட்டுவரி யெழுதியிருப்பதும் பாமர ப்ரதாரணம். துவரைப்பிரான் திருவருளென்னும் நமது க்ரந்தம் அன்றே தோன்றித் திசைதொறும் கமழா நின்றது. அதன்மேல் வாய்திறக்க வழியற்றவர் எதை வேணுமானாலும் எழுதிக்கொண்டு கிடக்கட்டுமே.

* என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும் * என்றவிடத்திற்கு இவர்களுடைய உபந்யாஸம் என்ன முடிந்ததென்றால், எம்பெருமான் அங்கீகரித்த சேதநர்களின்மீது பிராட்டி சிதகுகளை [தோஷங்களை] எடுத்துரைத்து இவர்கள் துஷ்டர்களே' என்று எம்பெருமான் ஒப்புக்கொள்ளும்படி செய்துவிட்டாள் என்றும், 'என்பர்போலும்' என்றதனால் தேறினபொருள் இதுவேயென்றும் இவர்களுடைய உபந்யாஸம் முடிந்தது. என்னடியார் செய்தது தப்புத்தானென்று எம்பெருமான் சொல்லிவிட்டதாக முடிந்தால் பிறகு அந்த அடியார்களின் கதி என்னாயிற்று? இதற்கு பதில் சொல்லவேணும்—என்று கேட்கப்பட்டிருந்தது. அக்கேள்விக்கு ந்ருஸிம்ஹப்ரியா வெளியிடுகிறபதில் என்னவென்றால், குற்றவாளர்களுக்குச் செய்கிற தண்டனைகளைச் செய்யப் பெறுவதுதான் அந்த அடியார்களின் கதி—என்று வெளியிட்டிருக்கிறது. தேசிகனுடைய திவ்யஸூக்திகளுக்கு இப்படியா ஜலாஞ்ஜலி? * தன்னடியார் திறத்தகத்து என்கிற பாட்டில் பிராட்டியின் ப்ரஸ்தாவமில்லாமலிருந்தால் இவர்கள் எப்படிவேணுமானாலும் சாஸ்த்ரார்த்த க்ஷேபங்கள் செய்யலாம். பாசுரம் எவ்விதமாக இருக்கிறது! என்பதையும், எந்த மஹார்த்தத்தைப் பெறுவிப்பதற்கு இப்பாசுரம் நிபந்திக்கப்பட்டது என்பதையும், பிராட்டிவிஷயமான தேசிக திவ்ய ஸூக்தி எங்ஙனேயுள்ளது என்பதையும் சிறிதும் விமர்சியாமல் மனம்போனபடி எதையாவது எழுதுவித்து வெளியிடவா இப்பத்திரிகை தோன்றியது. சதுச்ச்லோகீபாஷ்யத்தில் ஸ்வாமியின் காரிகை இது—* ஸ்வஸ்தி கஉ-ரஹ-ஜஹூஜெ:வநெதூள கூ தத்ஹுயம் ஶ்ரிய நிரு ஹா ஆரணம் காஜெ ஷம்ய-க்ஷணஉ நு ஹ ஜெஹ = அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே.* இதன் கருத்தாவது—சேதனர்கள் செய்யும் புண்யபாபரூப கருமங்களுக்குத் தக்கபடி எம்பெருமான் பலன் [illegible]டுப்பன்; அப்போது பிராட்டி என்ன செய்வளென்னில், அவன் சேதநனை நிக்ரஹிக்க நினைக்குமளவில் புருஷகாரக்ருத்யம்பண்ணி அந்த நிக்ரஹத்தை நீக்கிவிடுவள். அவன் அநுக்ரஹோந்முகனுமளவில் அந்த அநுக்ரஹத்தைப் பிரபலப்படுத்துவள். இவ்விரண்டு கார்யமே பிராட்டிக்கு உள்ளது, என்பதாம்.

* என்பர்போலுமென்பதற்கு இவர்கள் முடிவு செய்யும் பொருளின்படி இந்தச்லோகத்தைத் திருப்பிக்கோக்கவேணும். சேதநர்களை அநுக்ரஹிக்க விருக்கிற எம்பெருமானிடம் கோட்சொல்லி தண்டிக்கச் செய்வதொன்றே பிராட்டியின் க்ருத்யமென்று ச்லோகம் ஏற்படவேணும். * ஸ நுஹ ஹொ நுவெவநெதூள நிரு ஹௌ நுவதூஷா நத:' க்ஷூஶ்ரீதா நர° ஷஷா ஷுவஷாயிநீ° ஶ்ரீயஷாஶ யெ * என்றொரு ச்லோகம் கட்டி இவர்கள் கோஷிக்கட்டுமே. இப்படிப்பட்ட விசேஷார்த்தங்களை மாலோல ஸதஸ்ஸில் ஒவ்வொருவர் வாயாலும் ப்ரவசனம் செய்வித்துக் கநகாபிஷேகம் செய்தருளட்டும் ஸ்வாமிகள் ... *

10. வரம் என்று மகுடமிட்டெழுதியிருப்பதும் உத்தமஸம்பாவநார்ஹமே. ந்யாஸதிலகத்தில் 'ச்ருத்வா வரம்' என்றவிடத்தில் விவக்ஷிதமான வரம் எது? என்பது விசாரம். இவர்களே ஆதரிக்கிற வியாக்கியானத்தில் அந்த வரஸ்வரூபம் விசதீகரிக்கப்பட்டிருப்பதைப் பன்முறையுமெடுத்துக் காட்டினோம். திருக்குடந்தை வித்வான்கள் பலர் கூடிப் பரிசோதித்துப் பதிப்பித்தவதனை நம்புவதற்கில்லையென்று ஆரவாரிக்கிற இவர்களுடைய வாக்கையே உலகமெல்லாம் நம்பி வாழட்டும். ப்ராமாணிகர்கள் தெளிந்திருப்பதே நமக்குப்போதுமானது. நூற்றுக்கணக்காக நாமும் நமரும் எழுதியுள்ள விஷயங்களைக் கண்டு கண்டு ஏங்கிக் கிடக்குமிவர்களின் நிர்லஜ்ஜதையொன்றே சோசநீயமானது. (பத்ராதிபர்.)

---